# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 9 | மார்ச் 10, 2022 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 9 | March 10th, 2022 | Annual Subscription Rs. 100/-




# நான் அடைந்த ஞானம்



ஸ்ரீபகவத் மிஷன் தலைவர் டாக்டர் திரு.கைலாசம் ஐயா அவர்கள். ஸ்ரீ பகவத் ஐயாவின் புரிதலை தன்னுடைய வாழ்வில் உள்வாங்கி கொண்டு அவருக்கே உரித்தான கவிதை நடையில் எடுத்துரைக்கும் புரிதல் விளக்கம்.

புறவுலகில் அறிவொளியால்
வெற்றிகளை பெற்றது போல்,
அகவுலகில் அறிவொளியால் மனதை
வெல்லலாம் என்ற ஆசையால்
போராட்டமே வாழ்க்கையாகிப் போனது.
ஆன்றோரும் அவ்வழியே காட்டினர்.
ஆன்மீகமும் அவ்வழியை சொன்னது.
போராட்டம் நீண்டது!
ஞானம் தேடுதல் நீண்டது!!

பல்லாண்டு முயற்சியோ,
பல பிறவி முயற்சியோ,
ப்ராரப்த நேரமோ,
ஞானமடைய உனக்கு முயற்சி வேண்டும்
தொடர்ந்து முயல்.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


முயலாமை இயலாமை ஞானம் தராது என்றனர்.

அய்யா வந்தார் – பகவத்
அய்யா வந்தார்.

மனதில் போராட்டம் இருக்கும் வரை ஞானத்தெளிவு
அமையாது.

அறிவைக் கொண்டு மனதை கலக்காதிரு.
மனம் தானே தெளியும்.
அறிவை புறத்தே வெற்றி கொள்ள பயன்படுத்து.

அதே அறிவால்
அகத்தை வெற்றி கொள்ள முயலும்
அறியாமை (அஞ்ஞானம்)
நிறுத்து.
போராட்டம் நிறுத்து.
அஞ்ஞான நீக்கமே ஞானம்.
போராடாத மனமே
தெளிவான மனம்.
கலக்கப்படாத மனமே
இயல்பான ஞான மனம்.

மனதின் இயல்பே ப்ரவாகம் போல் தெளிவடையும்.

மனதின் இயல்பை
அறிவின் திறத்தால்
கலங்கடிக்காதே!
தானே தெளிவதை
வீணாய் கலக்கி
துன்பப்படாதே!

சும்மா இரு.
மனம் தெளிவாகும்.
அதுவே நம் இயல்பான
ஞான நிலை.

அறிவுடன் செயல்படு
வெளியே – வெற்றி கொள்.

அறிவை அனுப்பி விடு
வெளியே
மனதில் தெளிவு கொள்.

மனதிற்கு அறிவிலிருந்து விடுதலை!
அதுவே ஆன்மீக விடுதலை!!
அதுவே முக்தி
அதுவே
அனந்தானந்தம்.

**திரு. நா.கைலாசம்**
தலைவர். ஸ்ரீ பகவத் மிஷன்.




# நான் அடைந்த ஞானம்

சில தினங்களுக்கு முன்னால் ஞான முகாம் ஒன்று சேலத்தில் நடைபெற்றது. அதில் கலந்து கொண்ட அன்பர் ஒருவர் தன்னுடைய பிரச்சனைகளை, தனியாக சந்தித்து என்னிடம் விளக்கினார்.

அவர் வெளிநாட்டில் விஞ்ஞானியாக வேலை பார்ப்பதாகவும், அவருடைய வேலை சம்பந்தமாக அவருடைய மேலதிகாரியுடன் சில பிரச்சனைகள் ஏற்பட்டதால் அவர் தனது வேலையை விட்டு விட்டதாகவும், தற்போது வேறு வேலை தேடிக் கொண்டிருப்பதாகவும் கூறினார்.

அவர் வேறு ஒரு கேள்வியையும் கேட்டார்.

"நான் ஏற்கனவே உங்களது கருத்தை தெரிந்து வைத்திருக்கிறேன். நான் ஞானமடைந்து விட்டதாகவே எண்ணி வந்தேன். எனக்கு நல்ல அனுபவங்களே ஏற்பட்டன. எந்த பிரச்சனையும் என்னைப் பாதிக்காமல் இருந்து வந்தன. ஆனால் இப்போது அந்தப் பிரச்சனைகள் பல என்னைப் பாதிக்க ஆரம்பித்து விட்டன. அதனால் நான் ஞானம் அடைந்துவிட்டேனா என்பதிலும் எனக்கு சந்தேகம் ஏற்படுகிறது. ஞானம் என்றால் என்ன என்பதிலும் எனக்கு குழப்பம் நீடிக்கிறது. ஞானம் சம்பந்தமாக இன்னும் நான் என்ன செய்ய வேண்டும் ?"

அவர் தனது பொருளாதார நிலையில் ஓரளவு சரியான நிலையில் இருந்தாலும்கூட, உலக வாழ்க்கையைப் பொருத்த அளவில் அவருக்கு ஒரு ஸ்திரத் தன்மை தேவைப்படுகிறது.

இன்னும் அவர் வேலை தேடிக் கொண்டுதான் இருக்கிறார். சரியான வேலை கிடைத்துவிடும் நிலையில், உலகியல் வாழ்க்கையிலும் அவருக்கு ஒரு ஸ்திரத்தன்மை ஏற்பட்டுவிடும்.

ஆனாலும் கூட இன்றைய கட்டத்தில்– இன்றைய நாளில் அவர் ஒரு நிச்சயமற்ற தன்மையில் இருப்பதுதான் அவருடைய யதார்த்தமான அம்சமாக உள்ளது. அதுதான் இயற்கையும் கூட.

வேலை தேடிக் கொண்டிருப்பவர்கள் நிம்மதியாக இருக்க முடியுமா?

அவர்கள் எதோ ஓர் எதிர்பார்ப்புடன்தான் இருந்தாகவேண்டும்.

எதிர்பார்ப்புகள் இருக்கும் வரை மனம் அலைபாயத்தான் செய்யும்.

இவருக்கு என்ன விதமான தீர்வுகள் தேவை?

இவருக்கு இரண்டு விதமான தீர்வுகள் தேவைப்படுகின்றன.

அவர் தனக்குத் தகுதியான வேலைகளைத் தேடிக்கொள்ள வேண்டும்.

அதற்காக அவர் தேவையான – தளராத முயற்சிகளை எடுத்துதான் ஆக வேண்டும். வெற்றி காணும் வரை அவருக்கு ஒருவித பரபரப்பு உணர்வு இருந்துதான் ஆக வேண்டும். அதுதான் இயற்கை.

அவருக்குள்ள இரண்டு விதமான பிரச்சினைகளில் இது முதலாவது அம்சம். அவர் செயல்களின் மூலமாகதான் – முயற்சிகளின் மூலமாகதான் இதற்கான தீர்வை அடைந்தாக வேண்டும்.

இது அவருடைய முதலாவது கட்டம்.

இரண்டாவது கட்டம் அவருடைய ஞானத் தெளிவு.

ஞானத் தெளிவு என்பது என்ன?

புற உலகக் கடமைகளை ஒழுங்கு படுத்துவது என்பது வேறு,

அக அனுபவங்களை ஒழுங்கு படுத்துவது என்பது வேறு.

புறச் செயல்களைப் பொருத்த அளவில் அவை நபருக்கு நபர் வேறுபட்டதாகும். அதனால்

ஒவ்வொருவரும் தங்களுக்கு தேவையானவற்றைத் தேர்ந்தெடுத்து, அவற்றை செயல்படுத்த வேண்டும்.

ஆனால் அகத்தைப் பொறுத்த அளவில் அதன் செயல்பாடு வேறுவிதமாக உள்ளது. அங்கு நல்லது, கெட்டது கிடையாது; வேண்டியது, வேண்டாதது கிடையாது; தேவையானது, தேவையற்றது கிடையாது.

பிறகு அங்கே எதைத்தான் தேர்ந்தெடுப்பது?

அங்கே அனைத்தும் நன்றே; அனைத்தும் ஒன்றே.

தேர்வு செய்வதற்கு எதுவுமே இல்லாத நிலையில், நாம் செய்வதற்கும் எதுவுமே இல்லை.

நாம் செய்வதற்கு எதுவுமே இல்லாத நிலையில் அங்கு என்னதான் நடக்கிறது?

அங்கு இயற்கைதான் செயல்படுகிறது. – இறைவன்தான் செயல்படுகிறான்.

மனிதனுடைய செயல் எதுவும் அங்கு இல்லை.

இனி ஞானம் என்றால் என்ன என்ற கேள்விக்கு வருவோம்.

தான் ஞானம் அடைந்து விட்டதாக, அவர் கூறினார். இத்தகைய தைரியம் இதற்கு முன்னால் எந்தக்காலத்திலும் ஏற்பட்டிருந்திருக்கவில்லை.

ஆனால் அவர் , தான் ஞானம் அடைந்து விட்டதாக மிகச் சாதாரணமாக அதைக் கூறினார்.

அது உண்மையா ?

உண்மைதான்.

பிறகு ஏன் அவருக்கு இந்தக் குழப்பம்?

அவர் ஞானம் அடைந்து இருந்தாரா? அல்லது ஞானமே அடையவில்லையா?

அவர் எதைத்தான் அடைந்திருந்தார்?

அவர் அடைந்தது ஞானமா அல்லது வேறு ஏதாவது ஒன்றா?

ஞானம் என்ற பெயரில் அவர் எதைத்தான் அடைந்திருந்தார் ?

எதனால் அவருக்கு, தான் ஞானம் அடைந்து விட்டோம் என்ற திருப்தி கிடைத்தது ?

காலம் காலமாக ஆன்மிக உலகத்தில், ஞானம் என்ற பெயரில், ஏதோ ஒரு பிரமாண்டத்தை அடைவதையே கொடுத்திருந்தார்கள். ஆனால் எதையோ அடைவது ஞானம் அல்ல.

அடைவது அனைத்தும் பந்தங்களே. அவை அனைத்தும் கட்டுகளே.

அடைவது எவையும் விடுதலை கிடையாது.

எந்த அனுபவங்களையும் பிடித்துக் கட்டாமல் இருப்பது தான் விடுதலை; முக்தி; மோட்சம்.

நமது புது வகையான அணுகுமுறையினால் பலருக்கும் மிக எளிதாக ஞானப்புரிதல் ஏற்பட்டு விடுகிறது.

துக்கங்களிலும் துயரங்களிலும் இருப்பவர்களுக்கு ஞானப் புரிதல் ஏற்பட்டால் என்ன ஆகும்? அவர்களுடைய துன்பங்களும் துயரங்களும் காணாமற் போய்விடும். அதன்பிறகு அவர்கள் நிம்மதி அடைந்து விடுவார்கள். போராட்டம் இல்லாமற் போய்விடும். சாந்தி ஏற்பட்டுவிடும்.

இது வரையிலும் துன்பங்களிலும் துயரங்களிலும் அலைக்கழிக்கப்பட்டு வந்த அவர்கள், நிம்மதிப் பெருமூச்சு விட்டு அமைதியாகி விடுவார்கள்.

இந்த அமைதி நிலை, அவர்களுக்குப் பிடித்தமான ஒன்றாக இருக்குமா, அல்லது அவர்களுக்குப் பிடிக்காத ஒன்றாக இருக்குமா?

நிச்சயமாக அது அவர்களுக்கு பிடித்த ஒன்றாகதான் இருக்கும்.

நெருப்பில் எரிந்து கொண்டிருந்த அவர்கள், இப்போது தென்றலை உணர்ந்திடுவார்கள்.

தாங்கள் மிகவும் நல்ல நிலையில் இருப்பதாகவே அவர்கள் உணர்வார்கள்.

ஆனால் அவர்களை அறியாத அடுத்த கட்டம் ஒன்றும் உள்ளது. அதனால் அவர்கள் தங்களை அறியாமலேயே தாங்கள் அனுபவிக்கும் தென்றலை எப்போதும் தங்களோடு வைத்திருக்கவே விரும்புவார்கள்.

நெருப்பில் இருந்து விலகி இருக்கவே விரும்புவார்கள்.

எதைப் புரிந்து கொண்டதால் அவர்கள் ஞானம் அடைந்தார்கள் ?

அவர்கள் துன்பங்களிலும் துயரங்களிலும் உளண்டு இருந்து வந்தார்கள்.

அவர்கள், எவையுமே வேண்டாம் என்று தங்களுடைய ஒட்டுமொத்த மன அனுபவங்களையும் புறக்கணித்த நிலையில்தான் அவர்களது மனம் விடுதலைபெற்று இயங்கியது.

ஆனால் இப்போது உள்ள அந்த நிலைமையே வேறு. இப்பொழுது அவர்கள் அமைதியில் ஆழ்ந்து இருக்கிறார்கள். இது அவர்களுக்கு மிகவும் பிடித்து

இருக்கிறது. இதை உதறி எறிய அவர்கள் விரும்புவது இல்லை.

விளைவாக அவர்கள் தாங்கள் இருக்கும் இடத்தில் இருந்துவிட நேர்ந்து விடுகிறது.

இயற்கையைப் பொருத்த வரை இருக்கும் இடம் எப்போதும் மாறிக்கொண்டே இருக்கிறது. உயிருள்ள இருப்பு நிலை என்பது திரவமாக ஓடுவதுதான். அது ஒருபோதும் திடமான திடப்பொருளாக தேக்கம் அடைவதில்லை.

அவர்கள் வரும்போது அது உண்மையில் தென்றல் இருக்குமிடமேதான்.

ஆனால் தென்றலும் மாறிவிடும் அல்லவா?

திடநிலை என்று எதுவுமே கிடையாது.

தென்றலை திடநிலையாக்க முயற்சித்தால் என்ன ஆகும்? முரண்பாடு தான் ஏற்படும்.

அவர்கள் எப்படி ஞானம் அடைந்தார்கள் ?

எதையோ வேண்டும் என்று கேட்டு, பற்றிப் பிடித்து தான் ஞானம் அடைந்தார்களா ?

**எது வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் இருந்து விட்டுப் போகட்டும்** என்று எல்லாவற்றையும் அடியோடு புறக்கணித்த நிலையில் தான்,

எல்லாமே அதுவாகச் செயல்பட்டன.

– அனைத்துமே விடுதலை பெற்றன.

நம் மன அனுபவங்கள் அனைத்தையும் மொத்தமாக விடும்போது, அவை எவை சம்பந்தமாகவும் எந்தக் கோரிக்கையும் வைப்பதில்லை.

அவை அனைத்துமே இயற்கைதான் என மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்கிறோம்.

அதுவே ஞானம் என்று கூறுகிறோம்.

ஆனால் இப்போது நமது நிலைமை என்ன ?

நமது மன இயக்கத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளத் தயங்குகிறோம்.

அதனால் நாம் அடைந்த ஞானமும் கேள்விக் குறியாகி விடுகிறது.

நல்லவிதமான அனுபவங்கள் ஏற்பட்டால் மட்டுமே என்னை நான் ஏற்றுக் கொள்வேன் என்ற போக்கு ஏற்பட்டு விடுகிறது.

புறச் செயல்கள் அனைத்தும் வினோதமானவைகளாகவே இருக்கும். சிக்கல் மிகுந்ததாகவே இருக்கும்.

தென்றலாக இருக்கும் அதுவே புயலாகவும் மாறிவிடும்.

புறத்தைப் பொருத்த வரையில் நமது திறமைக்கு தான் முதலிடம்.

நமது சூழ்நிலைகளை சாமர்த்தியமாக எதிர்கொண்டு வெற்றி வாகை சூட வேண்டும்.

நாம் வழக்கமாகக் கூறும் சிடுமூஞ்சி மேனேஜர் உதாரணத்தைதான் இங்கு நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு கம்பெனியில் நீங்கள் வேலை பார்க்கிறீர்கள். உங்களுடன் இன்னும் பலரும் வேலை பார்க்கிறார்கள். உங்களுக்கு ஒரு மேனேஜர். அவர் சிடுமூஞ்சி மேனேஜர். எடுத்ததற்கெல்லாம் சிடு சிடு என்று விழுவார்.

இப்போது உங்களுக்கு ஒரு பத்து நாள் லீவு வேண்டும். அவர்தான் அனுமதிக்கவேண்டும். ஒரு நாள் லீவு கேட்டாலே சிடுசிடுவென்று விழுவார். உங்களுக்கு 10 நாட்கள் லீவு வேண்டும். அவரிடம் சென்று விண்ணப்பத்தைக் கொடுக்கிறீர்கள். அவர் என்ன செய்வார்?

அவர் வழக்கத்தை விடவும் அதிகமாகவே சிடுசிடுப்பார். பத்துநாள் என்றதும் வானத்துக்கும் பூமிக்காகவும்கூட குதிப்பார்.

இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள் ?

பதிலுக்கு நீங்கள் அவரிடம் சண்டை பிடிப்பீர்களா?

அவரது சிடுசிடுப்புகளைக் கண்டுகொள்ளாமல் , நீங்கள் உங்கள் காரியத்தில் மட்டும் குறியாக இருந்து விடுவீர்கள். நீங்கள் பத்து நாள் விடுமுறையையும் சாமர்த்தியமாக பெற்று விடுவீர்கள்.

இப்படித்தான் புறவுலக அணுகுமுறை உள்ளது. அக உணர்வுகளைப் புறக்கணித்து, புறச்செயல்களைக் கையில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

அக உணர்வுகளைப் புறக்கணிக்கும் தோறும் புறச்செயல்களைச் சாமர்த்தியமாக எதிர்கொள்ளும் வீரியமும் கூட நமது அகத்தில் இருந்தே வெளிப்பட்டுவிடும்.

இந்த சந்தர்ப்பத்தில் நமது **உணர்மனம்** மற்றும் **முழு மனம்** பற்றிய செய்திகளையும் நாம் இணைத்துக் கொள்ளும் பட்சத்தில், நாம் சுமக்க வேண்டிய பொறுப்புகளும் வெகுவாகக் குறைந்து விடும்.

முழு மனம் செயல்படும் போது நமது அக இயக்கமும், புற இயக்கமும் கூட ஆரோக்கியமான நிலையை அடைந்துவிடும்.



# ஸ்ரீ சத்குரு தேனி சுவாமிகள் ஜீவ சமாதி திருக்கோயில் 6–ஆம் ஆண்டு குரு பூஜை



தள்ளாத நிலையில் தளராத நம்பிக்கையுடன் ஸ்ரீ பகவத் பவனை திறந்து வைக்கும் ஆர்வத்துடன் தேனிசுவாமிகள்...

நமது ஸ்ரீபகவத் அய்யாவின் குருநாதர் தேனி சுவாமிகள், ஸ்ரீபகவத் ஐயாவிற்கு இறை ஞானத்தை போதித்தவர்.

தேனி சுவாமிகள் நமது ஸ்ரீபகவத் அய்யாவை செல்லமாக வக்கீல் சாமி என்று அழைப்பதுண்டு.

மேலும் நமது ஸ்ரீபகவத் பவன் கட்டிடம் உருவாவதற்கு மூல காரணமாக இருந்தவர். கட்டிடப்பணியின் முதல் ஆலோசனை கூட்டத்திற்கு வந்து சிறப்பாக தொடங்கி வைத்து ஸ்ரீபகவத் பவன் கட்டிடப் பணிக்காக ரூ.5 ஆயிரம் நன்கொடையை வழங்கி துவங்கி வைத்தவர். அந்த கட்டிடப் பணி ஆறு மாதத்தில் வெகு சிறப்பாக முடிவு பெற்றது. மேலும் தனது பொற்கரங்களால் ஸ்ரீ பகவத் பவனை திறந்து வைத்தார்.

பிறகு நம் அனைவருக்கும் அவர் கொடுத்த தீர்க்கதரிசனமான வார்த்தைகள் என்னவென்றால், **"புத்தர் காலத்தில் புத்தரை சுற்றி 5000 பேர் ஞானிகளாக வலம் வந்தனர்...**

**"எதிர்வரும் காலங்களில் வக்கீல் சாமியை (ஸ்ரீபகவத் ஐயாவை) சுற்றி 5 கோடி பேர் உலகம் முழுவதும் ஞானிகளாக வலம் வருவார்கள்"** என்று கூறி அடுத்த இரண்டு மாதங்களில் 20.03.2016 அன்று ஜீவசமாதியை அடைந்தார்.

சத்குரு தேனி சுவாமிகள் ஜீவசமாதி திருக்கோயில் 6ஆம் ஆண்டு குருபூசை திருவிழா 20.03.2022 அன்று நடைபெற உள்ளது. தேனி சுவாமிகளின் தீர்க்க தரிசன வார்த்தைகளே ஸ்ரீபகவத் மிஷனின் லட்சிய இலக்காக மாறியது. உண்மையைத்தேடும் அனைவருக்கும் இந்த ஞானத்தெளிவை வழங்குவது நமது பகவத் மிஷனின் லட்சியமாகவே மாறியது. தனி மனித மாற்றமே சமுதாய மாற்றம். அதுவே உலக மாற்றத்திற்கான விதை. அந்த விதையைதான் ஸ்ரீ பகவத் ஐயா ஞானப் புரிதல் என்ற பெயரில் ஞானமுகாமில் தேடுதல் கொண்ட அனைவருக்கும் வழங்கி வருகிறார்கள்.



தனது தீர்க்க தரிசனத்தை வக்கீல் சுவாமிடம் (ஸ்ரீ பகவத் ஐயா) தெரிவிக்கும்போது...

புரிந்தவர்கள் அனைவருமே மன விடுதலை பெற்று சுய ஒளி பெறுகிறார்கள்.

சுய ஒளி பெற்றவர்கள் ஒன்று கூடும் போது இதுவரை சாத்தியமே இல்லாத விஷயங்கள் கூட சாத்தியமாக மாறுகிறது.

தனிமனித மாற்றத்தையும் சமுதாய மாற்றத்தையும் உலக மாற்றத்தையும் உருவாக்குவதே புரிந்து கொண்ட நம் அனைவரின் கடமையாகும். சுய ஒளி பெற்ற அனைவரும் ஸ்ரீ பகவத் மிஷன் என்ற அமைப்பின் கீழ் ஒன்றுகூடி உலக மாற்றத்திற்கான செயலில் ஈடுபடுவோம்.

இதுவே தேனி சுவாமிகளின் தீர்க்க தரிசனம்.

இனி அதுவே நம் அனைவரின் லட்சியமாக கொண்டு செயல்படுவோம். அனைவரும் ஒன்று கூடினால் உலக மாற்றமும் சாத்தியமே.

# ? கேள்வி பதில்...

V.A.P. சரவணன்
செல் : 99942 05880



**கேள்வி :** நான் ஆன்மிகத் தேடுதல் கொண்ட இளைஞன். எனக்கு வாழ்க்கைக்கு தேவையான வசதியான பொருட்களின் மீது அதிகம் ஆர்வம் இல்லை. பொதுவாகவே எனக்கு பொருட்களின் தேவையும் மிகவும் குறைவுதான். அதில் எனக்கு அதிக நாட்டமும் இல்லை. என் பிரச்சனை வெளியுலகத்தில் இல்லை. எனக்கு பிரச்சனை என் மனதில் தான். எனக்கு நானே போராடும் போராட்டம் முடிவுக்கு வராமல் இருக்கிறது. அந்தப் போராட்டம் முடிவுக்கு வர நான் என்ன செய்ய வேண்டும்? கடந்தகால கவலைகளிலிருந்தும் எதிர்கால பயத்திலிருந்தும் விடுபட முடியவில்லை. எனது மனப் பிரச்சினைக்கு நிரந்தரமான தீர்வு எதுவும் உண்டா?

**பதில்:** நாம் மன நிறைவாக வாழ முடியாமல் போவதற்கு காரணம் புற பொருட்கள் அல்ல. நமது மன செயல்பாட்டை நாம் புரிந்து கொள்ளாமல் இருப்பதே இதற்கு காரணம். மனதின் செயல்பாட்டை புரிந்து கொள்வது ஒன்றே. மன துயரத்தில் இருந்து விடுபடுவதற்கான நிரந்தரத் தீர்வாக அமையும்.

அந்த வகையில், கடந்த டிசம்பர் மாதம் ஞான முகாமிற்கு வந்திருந்த ஐடி இன்ஜினியர் ஒருவரின் அனுபவப் பதிவு இந்தக் கேள்விக்கான பதிலாக இருக்கும் என்று எண்ணுகிறேன். இனி ஐடி இன்ஜினியர் உங்களுடன்...

**புரிதலுக்கு முன்னர் என் மன நிலை:**

எனக்கு விவரம் தெரிந்த வயதிலிருந்தே என் மனம் எப்பொழுதும் சமநிலையிலேயே இருக்க வேண்டும் என்று நான் விரும்பி வந்தேன்.

மகிழ்ச்சியை பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை.

ஆனால் சோக உணர்வையும், பய உணர்வையும் எனக்குத் தெரியாமலேயே எதிர்த்து வந்தேன்.

நிறைய உரையாடல்கள் எனக்குளே மனதுக்கும் எனக்கும் நடத்திக் கொண்டிருப்போம்.

எப்பொழுதும் கடந்த கால நிகழ்வுகளையும் எதிர்காலம் குறித்து நிறைய அச்சங்களையும் மனது சொல்லிக் கொண்டே இருக்கும்.

அவைகளை நான் மனதிலே வைத்து நிறைய உள்ளக் குமுறல்களை உருவாக்கி கொண்டிருந்தேன்.

பெரும்பாலும் இந்த நெகடிவ் எண்ண உணர்வுகளை மனதில் போராடி வென்று விட வேண்டும் என்று மிகுந்த போராட்டம் நடக்கும். அது நிறைய குழப்பத்தையும் பயத்தையும் கொடுத்தது.

நிறைய நேரம் அது எனக்கு மிகுந்த நிலையில்லாத தன்மையையும் விரக்தியையும் கொடுத்தது.

ஆன்மிக தேடுதலில்கூட மனது எதிலும் பாதிக்காத நிலையைதான் ஆன்மிகத்தின் உச்ச நிலையாக கருதினேன்.

என்ன புரிந்து கொண்டேன்?

பகவத் அய்யா பேசிய வீடியோக்களை YouTube மூலம் பார்த்தும் அவர் புத்தகங்களை வாசித்தும் கொஞ்சம் புரிதல் ஏற்பட்டது.

மனதில் ஏற்படும் எண்ணங்களும் உணர்வுகளும் நம்மை கேட்காமலேயே, நம்மை அறியாமலேயே வெளிப்படுகிறது.

நாம் அதை கையில் எடுத்து சரி பண்ணவில்லையென்றால் அதுவாக தானே வெளிப்பட்டு மறைந்து விடும்.

நாம் பண்ணும் தப்பு, அதை எப்படியோ கையில் எடுத்து சரி செய்து நமக்கு வேண்டிய உணர்வை தக்க வைக்க வேண்டும் என்ற போராட்டம்தான் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொண்டேன்.

அகநிலையில் நம்முடைய வேலை எதுவும் இல்லை என்பதை ஐயம் திரிபற விளங்கி கொண்டேன். நம் அகத்தில் நம்மை முழுவதுமாக கீழே போட்டு விட வேண்டும் என்பதும் விளங்கியது

அப்பொழுதுதான் நம் இயல்பிலிருந்து வரும் எண்ண உணர்வுகள் அதுவாக வெளிப்பட்டு பிரவாகமாக செல்லும் என்பதை நன்றாக விளங்கியது.

பகவத் அய்யா, சரவணன் அண்ணா, ஜீவமணி அண்ணா மற்றும் ஆனந்த் அண்ணா அவர்களின் தொடர்பு மூலம் ஞானப் புரிதல் ஏற்பட்டது. ஆனால் ஆரம்ப காலங்களில் அது நீடிக்கவில்லை. மீண்டும் மீண்டும், மனம் துன்பங்களால் பாதிக்காத சம நிலையையே விரும்பியது. சில வருடங்கள் இப்படியே கடந்தது. பின்பு கடந்த ஒரு வருடமாக நான் எனும்

தன்மையைதான் இவ்வளவு நாட்களாக இருக்கப் பிடித்துள்ளேன்; அந்த நானிற்கு இந்த உணர்வு மட்டும்தான் வர வேண்டுமென்று தொடந்து அகப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளேன் என்பதும் கொஞ்சமாகப் புரிந்தது.

பின்னர் டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற பகவத் அய்யாவின் மூன்று நாட்கள் ஞான முகாமில் கலந்து கொண்டேன். நான் எனும் தன்மையின் முழு பரிமாணமும் தெரிய வந்தது. நான் என்பதை இறுகப் பிடித்துக் கொண்டுள்ளேன் என புரிந்து கொண்டேன்.

**புரிதலுக்கு பின்னர் என் மன நிலை:**

புரிதலை உறுதிப்படுத்திய பின்பு இப்பொழுதெல்லாம் பய உணர்வோ அல்லது பிடிக்காத உணர்வோ வரும் பொழுது புரிதலினால் இயல்பாகவே மனது அதனுடன் போராடுவதில்லை. அது எவ்வளவு நேரம் இருந்தாலும் சரிதான் என்று என் உணர் மனது, இயல்பிலிருந்து வரும் அனைத்திற்கும் இடம் கொடுக்கிறது.

அவ்வப்போது என்னை அறியாமல் சில சமயம் மனதுடன் போராடுகிறேன். ஆனால் அது உணர் மனதிற்கு தெரிந்தவுடன் அதை அப்படியே விட்டு விடுகிறேன். இப்பொழுது மனப் போராட்டம் துளியும் இல்லை.

முக்கியமாக இப்பொழுது நான் எனக்குளே பேசி கொண்டு முரண்பாடு கொள்வதே இல்லை. எதையும் போராடி சரி பண்ணும் வேலை முற்றிலுமாக நின்றது. நான் எப்பொழுது என்னை சரி செய்வதை கை விட்டேனோ அப்பொழுதிலிருந்து நீண்டகாலமாக தேங்கியுள்ள மன கழிவுகள் உணர் மனதின் மூலமாக வெளியே வந்தது. அது மிகவும் சிரமமாக இருந்தது.

ஆனாலும் அகத்தில் என்ன நடந்தாலும் நாம் செய்வதற்கு ஒன்றுமில்லை என்ற புரிதலால் அனைத்தையும் வெளியேற மனது உறுதுணையாக தன்னைத் திறந்து கொண்டு இருந்தது.

**அற்ப உணர்வும், அற்புத உணர்வும் ஒன்று தான் என்பது புரிந்தது.** அது ஞானப் புரிதலில் தெளிவடைந்ததை காட்டுகிறது என்று நான் திண்ணமாக உணர்ந்து கொண்டேன்.

அதன் பின்னரே என் உண்மையான வாழ்க்கை ஆரம்பித்ததாக மனப் பூர்வமாக உணர்கிறேன்.

கடவுளின் கருணையும் ஆசீர்வாதங்களும் சேர்ந்து புறவுலகில் ஆசைகளும் தேவைகளும் எனக்கு மிகக் குறைவாகவே உள்ளன. அவற்றை நிறைவேற்றுவதில் பெரிய சிக்கலை புறவுலகில் நான் சந்திக்க வேண்டியது இல்லை. ஆனால் அகத்தை பொருத்தமட்டில் எனக்கு நானே போராடிய வாழ்க்கை மிகவும் துன்பமாகவே இருந்தன. இந்த அகத் துன்பத்தை நீக்க பல்வேறு ஆன்மிக அமைப்புகளை நாடி அவர்கள் சொல்லும் மனப் பயிற்சிகளை மேற்கொண்டும் எந்தப் பலனும் அளிக்கவில்லை.

இறுதியாக பகவத் அய்யாவின் ஞான புரிதலே எனது எல்லா விதமான அகப் பிரச்சினைகளுக்கும் போராட்டங்களுக்கும் தீர்வாக அமைந்தது. வாழ்க்கை புதிய பரிமாணத்தில் மலரத் தொடங்கியது.

## சென்னையில் 2 நாள் ஞான முகாம்

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

வருகின்ற ஏப்ரல் மாதம் 23 & 24 ஆம் தேதிகளில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது.

இடம் : Asha Nivas Social Service Centre, (A/c Hall)
No:9, Rutland Gate, 5th Street,
Nungambakkam, Chennai-600006.

நாள் : 23-04-2022 சனிக்கிழமை மற்றும்
24-04-2022 ஞாயிற்றுக்கிழமை.

நேரம் : காலை 9.30 மணி முதல்
இரவு 7.30 மணிவரை (2 நாட்களும்)
(தங்கும் வசதி கிடையாது)

மதிய உணவும் தேனீர் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கலந்து கொள்பவர்கள் 15-04-2022 தேதிக்குள் முன்பதிவு செய்ய வேண்டுகிறோம்.

முன்பதிவிற்கு :
+917904118421 +919994205880
+919789165555 +919884348800

முன்பதிவு செய்பவர்கள் கீழ்க்கண்ட வங்கி கணக்கில் தொகை செலுத்தி தெரிவிக்க வேண்டுகிறோம்.

ஞான முகாம் நன்கொடை ரூ.3000/- நபருக்கு.

ஸ்ரீ பகவத் மிஷன் Bank account HDFC Bank & SBI Bank ல் உள்ளது.

**Sri Bagavath Mission**
HDFC Bank A/c No.15907620000075
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission**
SBI Bank A/C No. 31784345329 IFS Code: SBIN0012772

**Google Pay +91 85310 36977**

**ஸ்ரீ பகவத் மிஷன்**

# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சென்ற பிப்ரவரி மாதம் 24-ஆம் தேதி வியாழக்கிழமை மாலை முதல் 27-ஆம் தேதி மதியம் வரை சேலம் ஸ்ரீ பகவத் பவானில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

காலை, மாலை இருவேளையும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் நடைப்பயிற்சியும் கலந்துரையாடலும் நடைபெற்றன.

கலந்து கொண்ட அனைவரும் ஒரு குடும்ப விழாவில் கலந்து கொண்டது போல் மகிழ்வுற்று ஞானத் தெளிவு பெற்றுச் சென்றனர்.

மேலும் இந்த ஞான முகாமில் இருபத்தி ஏழாம் தேதி காலை, ஆனைகட்டி இரா. ஆனந்தகுமார் அவர்கள் எழுதிய **சூன்யப் பிரவாகம்** எனும் புதிய நூல் அய்யாவின் முன்னிலையில் வெளியிடப்பட்டது.

இந்நூல் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் ஏற்பட்ட சந்திப்பையும் அந்தப் பயணத்தில் தனக்கு ஏற்பட்ட ஞானத் தெளிவையும் மிக அழகாகப் பதிவிட்டுள்ளார். இந்நூல் ஞான தாகம் கொண்ட அனைவரும் அவசியம் படிக்க வேண்டிய நூல்.

தேவையானவர்கள் நமது மிஷனோடு தொடர்பு கொண்டு இந்நூலை வாங்கி பயன்பெறலாம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் எழில்மிகு ஐருகுமலையின் அடிவாரத்தில் அமைந்திருக்கிறது. இந்த ரம்மியமான சூழ்நிலையில் மனதின் இயக்க உண்மையை ஐயாவின் அருகாமையில் இருந்து அவர் உரை கேட்டு புரிந்து கொள்வது என்பது மிகவும் சிறப்பாகவும் எளிமையாகவும் உள்ளது. இது அனைவருக்கும் கிடைக்க வேண்டிய பாக்கியம்.

இனி சேலத்தில் இரண்டு மாதத்திற்கு ஒரு முறையும் மற்ற ஊர்களில் அங்குள்ள ஆர்வலர்களின் வேண்டுகோளுக்கிணங்கவும் ஞான முகாம்களும் சத்சங்க கூட்டங்களும் (Public Meeting) ஏற்பாடு செய்ய உள்ளோம்.

இதுவரை ஞான முகாமில் கலந்து கொள்ளாதவர்கள், இனி வரும் ஞான முகாம்களில் அவசியம் கலந்து கொண்டு பயனடைய வேண்டுகிறோம்.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் திருநெல்வேலியில் தங்கி இருக்கிறார்கள்.

நாம் **ஞானியர் தினமாக** கொண்டாடுகின்ற மார்ச் 13-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 5 மணி முதல் 8 மணி வரை திருநெல்வேலி டவுனில் சாலியர் தெருவில் அமைந்துள்ள மாரியம்மன் கோயில் மண்டபத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஞான உரையாற்ற உள்ளார்கள்.

இத்தகவலை அனைவருக்கும் தெரிவித்து பயனடையச் செய்ய வேண்டுகிறோம்.

புரிதலை பகிர்வோம்! புனிதமாக பிரவகிப்போம்!!





# ஜென் கதை

## ”உள்ளுணர்வை நம்பலாமா ?”

ஒரு தீவிர ஆன்ம சாதகனுக்கு உள்ளுணர்வாக பல எண்ணங்கள் வருவதுண்டு. தொடர்ந்து அவனுடைய உள்ளுணர்வு சொல்படியே நடந்தான். பல வெற்றிகளும் கிடைத்தது. பல படுத்தோல்வியும் ஏற்பட்டது.

அவனுக்கு வெற்றி கிடைக்கும்போது அகம் மகிழ்ந்தான். தோல்வி ஏற்படும்போது மிகவும் துவண்டு போய் விரக்தி அடைந்தான்.

உள்ளுணர்வின் பிடியிலிருந்து விடுபட தெரியாமல் சிக்கித் தவித்தான்.

பல நேரங்களில் உள்ளுணர்வு அவனுக்கு ஆபத்து வரப்போவதாக உணர்த்தியது. அவன் மிகவும் பயந்து போனான். அவன் பயத்தோடு போராடி பயத்தினாலேயே உடல் பாதிப்பும் மன பாதிப்பும் அடைந்தான்.

உள்ளுணர்வின் படி செயல்படுவதால் பல நேரங்களில் அவனுடைய செயல்கள் அர்த்தமற்றதாக இருந்து. இதனால் அவனுக்கு நேர விரயமும் பல பாதிப்புகளும் ஏற்பட்டது.

அவனுடைய அனைத்து செயல்களிலும் உள்ளுணர்வின் ஆட்சியே பிரதிபலித்தது.

இதிலிருந்து விடுபட முடியாமல் தவித்தான்.

ஓர் ஞானியை சந்தித்து தன் நிலையை எடுத்துக் கூறி தீர்வு கேட்டான்.

ஞானி அவனுடைய நிலையை நன்கு புரிந்து கொண்டு,

”உள்ளுணர்வு என்பதும் ஓர் எண்ணம்தான். அது நம் கட்டுப்பாட்டில் இல்லை. எனவே உள்ளுணர்வுக்கு முக்கியத்துவம் கொடுப்பதை விட்டு விட்டு செயல் சார்ந்த அறிவுக்கு முக்கியத்துவம் கொடு” என்றார்.

சாதகன், ”அப்படி என்றால் உள்ளுணர்வுக்கு முக்கியத்துவம் தரக் கூடாதா? உள்ளுணர்வு சொல்வதை கேட்க கூடாதா?” என்றான்.

ஞானி, ”உன் உள்ளுணர்வு சொல்வதைக் கேள். அது உன் அறிவுக்கு ஏற்புடையதாக இருந்தால் செயல்படுத்து. அறிவுக்கு ஏற்புடையதாக இல்லாமல் இருந்தால் புறக்கணித்துவிட்டு சரியான செயலைச் செய்” என்றார் ஞானி.

சாதகன், ”சுவாமி அறிவுக்கு ஏற்புடையது, ஏற்புடையதல்ல என்பதை எப்படி கண்டுபிடிப்பது?” என்று கேட்டான்.

ஞானி, அந்த ஆன்ம சாதகனை ஒரு போக்குவரத்து மிகுந்த நெடுஞ்சாலையின் பாதை வளைவுக்கு அழைத்துச் சென்றார்.

சாலையின் ஒரு பக்க ஓரத்தில் நின்றுகொண்டு சாதகனிடம், ”இப்பொழுது உன் உள்ளுணர்வு ’ஒரு பேருந்து விரைவாக வந்து கொண்டிருக்கிறது. பொறுமையாக காத்திருந்து பேருந்து சென்றவுடன் சாலையை கடந்து செல்’ என்று சொல்லுகிறது.

உன் உள்ளுணர்வின் இந்த அறிவிப்பை ஏற்று பேருந்து சென்றவுடன் பொறுமையாக சாலையைக் கடந்து செல்.”

சாதகன், ”சரி சுவாமி” என்றான்.

ஞானி, ”இதே உள்ளுணர்வு ’ஒரு பேருந்து மிக விரைவாக வந்து கொண்டு இருக்கிறது. நீ தாராளமாக சாலையை கடந்து செல்லலாம். நீ சாலையை கடக்கும் வரை பேருந்து உனக்காக நிற்கும்’ என்று சொல்லுகிறது. இப்பொழுது உள்ளுணர்வு சொல்லும் இந்த அறிவிப்பை புறக்கணித்துவிட்டு நீ அறிவைப் பயன்படுத்தி பேருந்து செல்லும் வரை காத்திருந்து எச்சரிக்கையாக சாலையை கடந்து செல்.” என்றார்.

சாதகன், ”நன்கு புரிந்து கொண்டேன் சுவாமி” என்றான்.

”உள்ளுணர்வின் அர்த்தமற்ற அறிவிப்பை ஏற்றுக் கொள்ளாதே! அறிவோடு ஒத்துப்போகும் உள்ளுணர்வை மட்டும் ஏற்றுக்கொள்” என்றார்.

உள்ளுணர்வின் பிடியில் சிக்கி தவித்த சாதகன் விடுதலை உற்றான்.

# நிகழ்ச்சி நிழல்கள்

30 ஆண்டுகால ஞானத் தேடுதலை முடித்துக்கொண்ட திரு. வெங்கட்ராமன் ஸ்ரீ பகவத் ஐயா மற்றும் ஆசிரியர்களுக்கு மலர் மாலை அணிவித்து கௌரவித்த போது...



நேசம் Online ரேடியோ நிறுவனர் பிரபாகரன், Krishna Vidya Mandir Matric Hr.Sec.School & Krishnaswamy Educational Trust நிறுவனர் திரு. கிருஷ்ணா கஜேந்திரன் மற்றும் Mistick Venkat திரு. வெங்கட்ராமன் ஆகியோர் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்





பெரம்பலூர் அறிவுத் திருக்கோயில் தலைவர் மற்றும் பேராசிரியர் திரு. சந்திரசேகர் ஐயா அவர்கள் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்...

# நிகழ்ச்சி நிழல்கள்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

சூன்யப் பிரவாகம் புத்தக வெளியீட்டு விழாவின் போது











